#தோழர்_தமிழச்சி அவர்கள் தொடர்பாக
#தோழர்_கொளத்தூர்_மணி_அவர்கள்_அளித்துள்ள_செய்தி :

#தோழர்_தமிழச்சி_அவர்களுக்கு,

சில செய்திகளை உங்களுக்கு நினைவூட்டி, சிலசெய்திகளை சொல்லவும் விரும்புகிறேன்.

லூலு என்பவரால் நடத்தப்படும் WSB எனும் பெயர் கொண்ட முகநூல் தனிக்குழு பெரியாரியம், முற்போக்கு என்ற பெயரால் திசைதிருப்பல் வாதங்களை முன்வைத்து ஒழுக்கக் கேடுகளை நியாயப்படுத்துகிறார்கள் என்றும், பல பெண்களை ஒழுக்கக் கேடர்களாக்குகிறார் எனவும் சொல்லி,

அந்தக் குழுவில் எமது இயக்கத்தைச் சார்ந்த இரண்டு பெண் தோழர்கள் உறுப்பினராக இருக்கிறார்கள் என்று, ஏப்ரல் மாதமாக இருக்கலாம், கூறினீர்கள். இதுவே பல ஆண்டுகளுக்குப் பின்னர் என்னிடம் பேசியபோது நீங்கள் கூறிய செய்திகள்.

அப்போதே சொன்னேன், நீங்கள் குறிப்பிடும் இருவரில் ஒருவர்தான் எங்களுடன் இயங்கிக் கொண்டுள்ளார்; மற்றொருவர் இயக்கத்தில் இருந்து விலகி நிற்கிறார் என்றும், அந்த தோழரிடம் பேசுவதாகவும் சொல்லி இருந்தேன்.

எங்களுடைய பொறுப்பாளர் ஒருவரிடம் பேசியபோது அவரும் அந்த WSBகுழுவில் இருந்து விலகிவிட்டதாக கூறியுள்ளார் என்றும் உங்களிடம் சொன்னேன். ஆனால் அதற்கு முன்னதாகவே நீங்கள் பொதுவெளியில் நான் பேசி அவர்கள் அந்தக் குழுவில் இருந்து வெளியேறி விட்டதாக பதிவிட்டு விட்டீர்கள்.

அடுத்ததாக,ஒரு நான்கு பெண்கள் குறித்த ஒரு காணொளியை நீங்கள் வெளியிட்டு இருந்தீர்கள், அது என்னிடமும் பகிரப்பட்டு இருந்தது. அப்போதும் நான் உங்களிடம் பேசி இருக்கிறேன்,

அவர்கள் செய்வது தவறு என்று நீங்கள் கருதினால்

அவர்களைத் திருத்துவதற்கு, அதனை அவர்களுக்கு தனியாக அனுப்பி

ஆலோசனைகள் சொன்னாலே போதுமே ?

ஏன் அவற்றைப் பொதுவெளியில் போட்டு அவர்களை அவமானப்படுத்த வேண்டும்? என்று கேள்வி எழுப்பினேன்.

நீங்கள் சொன்னீர்கள், ஏற்கனவே முகம் மறைத்து ஒரு காணொளியைப் போட்டபோது துணிச்சல் இருந்தால் முகத்தை காட்டிப் போடு என்று அந்த WSB குழுவினர் சொன்னதால் அதனை வெளியிட்டேன் என்று சொன்னீர்கள்.

அடுத்ததாக தோழர் திருச்சி பெரியார் சரவணன் குறித்து :

அவரைக் குறித்து அவருடைய நடவடிக்கைகள் குறித்து நீங்கள் பெற்றிருக்கிற செய்திகளை, ஒலிப்பதிவின் மூலமாக பேசி எனக்கு அனுப்பி இருந்தீர்கள். ஆனால் ஆதாரம் என்ற வகையில் அவர் பணம் பெற்றதாக கூறி சில வங்கி கணக்குகளை எனக்கு அனுப்பி இருந்தீர்கள். மற்ற செய்திகள் எல்லாம் உங்களுக்குக் கிடைத்த செய்திகள், சில நபர்கள் வழியாக கேட்டறிந்த செய்திகள் மட்டுமே.

அடுத்து, தோழர் சுந்தரவள்ளி அவர்களைப் பற்றி .....

அவர் பெரியார் சரவணனுக்கு ஆதரவான பதிவுகளைப் போடுகிறார் என்று சொல்லி அவர் மீது சில குற்றச்சாட்டுகளை எனக்கு ஒலிப்பதிவாய் அனுப்பி இருந்தீர்கள். நான் உங்களிடம் தொலைபேசி வழியாக அழைத்து, ”அவர் சமூக அக்கறையோடு களத்தில் இயங்குகிற ஒரு தோழர் என்பது குறித்தும், செவிவழிச் செய்திகளை வைத்து குற்றம் சாட்டுவது சரியாக இருக்குமா? என்பதையும் பரிசீலியுங்கள்” என்று சொல்லி இருந்தேன். ஆனால் நீங்கள் அவர் உங்கள் கருத்துக்கு எதிராக உங்களை விமர்சித்து சில காணொளிகளை வெளியிட்டு இருக்கிறார் என்று சொன்னீர்கள். நான் பார்க்கவில்லை என்றதால் காணொளியை அனுப்பி இருந்தீர்கள். அதில் அவர் தமிழச்சி என்று சொல்லி உங்களைக் குறித்துப் பேசி இருப்பதாகச் சொல்லி இருந்தீர்கள். ஆனால் அதில் அவர் பேசியிருந்தது மார்க்சிஸ்ட் ஆக இருந்தாலும் சரி, பெரியாரிஸ்ட்டாக இருந்தாலும் சரி, அம்பேத்கரிஸ்ட்டாக இருந்தாலும் சரி தமிழ்தேசியிஸ்ட்டாக இருந்தாலும் சரி என்றுதான் பேசியிருக்கிறார்; அதை தமிழச்சியிஸ்ட் என்பதாக நீங்கள் புரிந்து கொண்டீர்கள் என்பதை நான் எடுத்துக் கூறினேன்.

அடுத்து,

எங்கள் கழகக் குடும்பப் பெண் ஒருவர், உங்களைப் பற்றி தவறான செய்திகளைப் பேசுகிறார், இழிவாகப் பேசுகிறார் என்று ஒலிப்பதிவு ஒன்றை அனுப்பி இருந்தீர்கள். நானும் அவரிடம் அந்த ஒலிப்பதிவுகளை அனுப்பி கருத்து கேட்கட்டுமா என்று கேட்டிருந்தேன். அனுப்பலாம் என்று சொன்னீர்கள். ஆனால் அவருக்கு அனுப்புவதற்கு முன்னதாகவே ஒரு நேரலையில் நீங்கள் மிகக் கேவலமாக அவரைப் பற்றி பேசி இருக்கிற செய்திகளை இன்று எங்கள் தோழர் ஒருவர் எனக்கு அனுப்பியிருந்தார். அதில் எவ்வித ஆதாரமும் இல்லாமல் - செவிவழிச் செய்தியாக உங்களுக்கு யாரோ சொல்லியிருக்கலாம் - மிகக் கடுமையான சொற்களால், அவதூறாக பேசியிருக்கிறீர்கள்.

அதேபோலத்தான் வேறொரு தோழரைப் பற்றி அரங்க குணசேகரன் தோழருக்கு எழுதிய செய்தியும் கூட .... எல்லாவற்றிலும் நீங்கள் சொல்லுவது தோழர் கொளத்தூர் மணிக்கு அனைத்தும் தெரியும், அவரிடம் கேட்டுக் கொள்ளுங்கள் என்பதாக...

நேரலைக் காணொளிகள் நீண்டு இருக்கும், பல இடங்களில் தரக் குறைவாக பேசியிருப்பேன், அதனால் அவற்றைப் பார்க்காதீர்கள் என்று நீங்கள் பலமுறை கூறியிருக்கிறீர்கள். பார்க்குமாறு கூறியிருந்தாலும் ஒரு மணி நேரத்துக்கும், அதற்கு மேலாகவும் உள்ள அவற்றைப் பார்த்திருக்கப் போவதுமில்லை. இவ்வாறு ஏராளமான நிகழ்வுகள் என் கவனத்துக்கு வராமலே நிகழ்ந்திருக்கின்றன.

ஆனால் எனக்கு என்னென்ன தெரியும்? நீங்கள் அனுப்பிய ஒலிப்பதிவுகள்தான். பல நேரங்களில் மேலும் பல காணொளிகள் உள்ளன, உரிய நேரத்தில் வழக்குக்குப் பயன்படுத்த உள்ளதாகக் கூறிவந்திருக்கிறீர்கள். அனுப்பிய ஒலிப்பதிவுகளைக்கூட, அனைத்தையும் கேட்க நேரமில்லாமையால், ஒரு தோழரிடம் அவற்றைப் பாதுகாத்து வைக்குமாறு அனுப்பி வந்தேன்; பாதுப்பாக வைப்பதற்காக அனுப்பி வருகிறீர்களோ? என்ற யோசனையில் அவருக்குத் தொடர்ந்து அனுப்பிக் கொண்டிருந்தேன். மேலும் அவற்றை எப்படி சேமித்து வைப்பது என்று தெரியவில்லை நீங்கள் சேமித்து வையுங்கள் தேவைப்பட்டால் ஒருவேளை அவர் பாதுகாப்பாக தனியாக ஒரு பிரதி இருக்கட்டும் என்று அனுப்பி இருப்பார் போலிருக்கிறது என்று சொல்லி அதை வைத்திருக்கச் சொல்லி அனுப்பி வந்தேன்.

அதற்கு முன்னாலும் நீங்கள் பலகாலம் என்னுடைய பழைய பகிரி எண்ணுக்கு அனுப்பி இருக்கிறீர்கள். அந்த பகிரி எண்ணை நீண்ட காலத்திற்கு முன்னாலேயே நீக்கியிருந்தேன். புதிய எண் அண்மையில் உங்களுக்கு கிடைத்ததாகச் சொல்லி அதற்குப்பின்னால் அனுப்பிய செய்திகள் இவைதான். அதற்கு முன்னால் அனுப்பிய செய்திகள் என்னவென்று எனக்குத் தெரியாது.

அதுபோலவே வேறு ஒரு சமூகப் பணியாற்றும் தோழரைப் பற்றி நான் உங்களிடம் அது நீங்கள் குற்றம் சொல்லும் அளவுக்கான செய்தியாக இல்லை என்று சொன்னபோது, நீங்கள் ஆணாக சிந்திக்கிறீர்கள்; ஆணாதிக்க சிந்தனை உங்கள் மூளையிலும் கொஞ்சம் இருக்கிறது போலும் என்றுகூட சொன்னீர்கள்.

ஆனால் இன்று அந்தக் காணொளி பற்றிய செய்தி எனக்கு வந்த பின்னர்தான் தோழர்கள் பலர் சொல்லுகிறார்கள், பல காணொளிகளில் நீங்கள் அனைத்தும் தோழர் கொளத்தூர் மணிக்கு தெரியும்; அவரை கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள் என்பதாக பேசியிருப்பதாக. ஆனால் நான் ஏற்கனவே குறிப்பிட்டுள்ள இவை தவிர வேறு எந்த செய்தியும் எனக்கு தெரியாதே. ஆதாரங்கள் என்று பார்த்தால் அனுப்பியவற்றில் சரவணன் தோழரின் வங்கிக் கணக்கு ஆதாரம் மட்டுமே அவ்வகையிலிருக்கும்.

ஆனால் இப்போதுதான் தோழர்களிடம், தொடர்ந்து முகநூலில் இயங்குகிற தோழர்களிடம் கேட்கிறபோது ஏராளமான செய்திகள் அப்படி சொல்லப்பட்டு இருக்கின்றன என்பதை அறிகிறேன்.

தோழர் சுப வீரபாண்டியன், தோழர் தொல்.திருமாவளவன் போன்றோரைப் பற்றியெல்லாம்கூட அவ்வாறே பேசியுள்ளீர்கள் என்றறிகிறேன். பல சமூகக் காரணங்களுக்காக இணைந்துப் பணியாற்றுகிற முன்னணித் தோழர்கள் பலரிடம் இவை என்னை அன்னியப்படுத்த வேண்டுமானால் பயன்படலாம். வேறு எந்தப் பயனும் விளையப் போவதில்லை.

நீங்கள் கூறியதைக் போல , பெரியாரியம் மார்க்சியம் போன்ற பெயர்களைப் பயன்படுத்தி அவர்கள் பெண்களுக்குத் தவறாக வழி காட்டி வருகிறார்கள் என்றும், குழு பெண்களின் இரகசியங்களைத் தெரிந்து கொண்டு அவற்றை வைத்து மிரட்டும் போக்கை அம்பலப்படுத்தி, பாதிக்கப்பட்டோரை மீட்கும் நோக்கில் இவை இல்லையே? அதை மட்டும் நோக்கமாகக் கொண்டு இவற்றை செய்து வருகிறீர்கள் என்றால் அது நல்லதுதான். ஆனால் உங்கள் கருத்தை ஏற்காமலோ, எதிராகவோ எவர் ஒருவர் பேசினாலும், பேசியதாக உங்களிடம் யாரேனும் ஒருவர் கூறிவிட்டாலும், அவர்களின் பண்பு நலன்களையும், நிலைப்பாடுகளையும், சமுதாய பங்களிப்பையும், பணிகளையும் சிறிதும் மனங்கொள்ளாமலும், நிதானமாக ஆய்ந்தறியாமலும் அவர்களைப் பற்றி கடுமையான, இழிவான சொற்களால் பேசுவது எந்த அடிப்படையில் என்பது புரியவில்லை. எதிரிகளின் எள்ளலுக்கு வேண்டுமானால் அவை பயன்படலாம்.

எனவே இது தொடர்பான செய்திகளில் தங்களிடம் இருந்து நான் விலகி நிற்க விரும்புகிறேன்.

எனவே, இனி இது தொடர்பான எந்தத் தகவல்களையும் எனக்கு அனுப்பவேண்டாம் என தெரிவித்துக் கொள்கிறேன்.

#கொளத்தூர்_மணி,

24.06.2020

பின்குறிப்பு:

இவை அனைத்தையும் எடுத்துச் சொல்லி நேற்று 35 நிமிடங்கள் உங்களுடன் பேசினேன். அப்போது அந்த மனித உரிமை செயல்பாட்டாளர் குறித்து உங்களிடம் கூறிய பெண் குறித்து சில செய்திகளை எடுத்துரைத்தபோது அவர் நம்பகமானவராக இல்லை; எனவே தொடர்பைத் துண்டித்து கொண்டேன் என்றீர்கள். ஆனால் மற்றவர்களைக் குறித்து சொல்லி வருபவர்கள் பற்றியும் நாளை இவ்வாறே அவர்களின் நம்பகமற்றத் தன்மை தெரிய வந்தாலும், இப்போது தூற்றிவிடப்பட்டுள்ள அவதூறுகளை அகற்ற முடியுமா?

இன்றும் நீங்கள் போட்டுள்ள பதிவினை இப்போதுதான் பார்த்தேன்.

எனவேதான் 24-6-2020 அன்று எழுதப்பட்டு, நிறுத்தி வைத்திருந்த இப்பதிவினை இந்த பின்குறிப்போடு அனைவருக்கும் அனுப்புகிறேன்.

அதோடு உங்களுடைய எண்ணையும் Block செய்துள்ளேன்.

வணக்கம்.

#கொளத்தூர்_மணி,
26.06.2020